உ

சிவமயம்.

நாற்கவிராசநம்பி

இயற்றிய

# அகப்பொருள்விளக்கம்

## மூலமும் உரையும்.



இவை

யாழ்ப்பாணத்துத் தெல்லிப்பழை

**வித்துவான் சிவானந்தையரால்**

பரிசோதித்து

கொக்குவில்

சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

பராபவ௵ பங்குனி௴.

**1907.**

# முகவுரை.



எக்காலத்தும் எவ்விடத்தும் யாவரானும் அறிந்து பயனெய்துதற்கு உரியதும்; எய்தத்தகுவதும்; எய்தவேண்டுவதும்; எய்தப்படுவதும் பொருளொன்றே, பிறிதில்லை. அங்ஙனம் அதனையறியுங் கருவி தெய்வத்தாற்றரப்படு மியற்கை அறிவும் நூற்கேள்வியான் முயன்றெய்தப்படும் செயற்கை யறிவுமென் றிருவகைப்படும். அவற்றுட் செயற்கையறிவுக்குக் கருவியாகிய நூல்களும் இலக்கணமு மிலக்கியமுமென் றிருவேறு வகையவாம். அவையிரண்டும் விம்பமும் பிரதிவிம்பமும் போல்வனவாகலின் ஒன்றையின்றியொன்றறிதற் கமையாது. இலக்கணக் கேள்விக்கு இலக்கியக் கேள்வியும் இலக்கியக் கேள்விக்கு இலக்கணக் கேள்வியும் ஒருதலையான் வேண்டப்படுவனவேயாம்.

இலக்கணநூல் எழுத்தும், சொல்லும், பொருளும், யாப்பும், அணியும் என ஐவகைத்து. யாப்பணிகளைப் பொருட்கணடக்கி மூன்றுமென்ப. எழுத்தும் சொல்லும் யாப்பும் அணியும் என நான்கும் தன்னைநோக்கிநிற்பத் தானவற்றுளொன்றையுநோக்காது நிற்றலான் பொருளிலக்கணம் ஏனை நான்கினுஞ் சிறப்புடைத்து. பொருளிலக்கணக்கேள்வி யிலவழி இலக்கியவுணர்ச்சி யெவ்வாற்றினு மரிது. அப்பொருளிலக்கணம் அகம் புறம் என்று இருவகைப்படும்.

# முகவுரை

பட்டாங்கு யாண்டுமொப்பநிகழ்தலால் பொருளிலக்கணம் எம்மொழிக்கண்ணுமுளதேனும் இலக்கணநூலாகச் செய்து கற்றறியப்படுவது தமிழ்மொழி யொன்றன்கண்ணன்றி வேறு எம்மொழிக்கண்ணுமில்லை இல்லையாகவே அவற்றிற்கு இலக்கண வரம்புமின்று. இலக்கண வரம்பின்றாகவே இலக்கிய நூல்கள் இனிது கற்று உணரப்படுமாறுமரிது. ஏனைமொழிகள் பொருளிலக்கணம் ஒன்றுமொழிந்து ஏனை நான்கனுள் நான்கும் மூன்றும் இரண்டும் ஒன்றுமுடையனவே யன்றிப் பொருளிலக்கணமுடையனவல்ல. தமிழ்மொழிக்கண் பொருளிலக்கணக் கேள்வியான் கற்போர்க்கு நூற்பொருள்கள் நன்குணரப்பட்டு எஞ்சாது சுவைபயந்து நிற்கின்றன. இதனால் எம்மொழியினும் தமிழ்மொழியினிதெனவும் நறுந்தமிழ் எனவும் செழுந்தமிழ் எனவும் கனித்தமிழெனவும் பலவாறாகச் சான்றோரெல்லாம் தமிழ்மொழியினைப் பாராட்டினர். இதனை நன்குணர்ந்த திருவிளையாடற் புராண நூலார் "கண்ணுதற்பெருங்கடவுளுங்கழகமோடமர்ந்து-பண்ணுறத்தெரிந்தாய்ந்தவிப்பசுந்தமிழேனை-மண்ணிடைச்சிலவிலக்கணவரம்பிலாமொழிபோ-லெண்ணிடைப்படக்கிடந்ததாவெண்ணவும்படுமோ" எனப் பாராட்டினர்.

சங்கப்புலவரெல்லாம் இப்பொருளிலக்கணச் சுவையே பெரிதுமுடையோர் இறந்தனபோக இக்காலத்து எஞ்சிநின்ற சங்கத்து நூல்களுள் பெரும்பாலன பொருள்நூல்களேயாம். சரித்திரவடிவாகிய நூல்கள் மிகச் சில இதனாலும் பொருளிலக்கணத்தின் சிறப்பு இனிது விளங்கும்

முற்கூறிய ஐவகையிலக்கணங்களையும் ஒருங்குகூறும்நூல்கள் அகத்தியம் தொல்காப்பியம் முதலியன. அவை விரிவுடைமையின் பிற்காலத்துச் சுருங்கி விளங்கிய நூல்கள் வேண்டப்பட்டு வழிநூலெனவும் சார்புநூலெனவும் ஓரோவொரு நயம்பற்றிப் பலநூல்கள் செய்யப்பட்டன. அவையெல்லாவற்றுள்ளும் நன்னூலும் இவ்வகப்பொருள் விளக்கமும் புறப்பொருள்வெண்பாமாலையும் யாப்பருங்கலக்காரிகையும் தண்டியலங்காரமுங் கற்போரியாவராலும் பாராட்டிக் கற

கப்படுகின்றன இவ்வைந்து நூல்களும் வடமொழியிலக்கணங்கள் போலத் தனித்தனியாக வேறுவேறாசிரியரால் செய்யப்பட்டில.

அழுருபத்தனுள்ளும் சொற்சுருக்கமே இலக்கணநூலோர் யாண்டும் வேண்டுவது சொற்சுருக்கம்போலச் சூத்திரம் பலகாலமையும் தந்நூற்கு பேரழகாக வேண்டுவர். பாணினீயம் முதலிய வடமொழியிலக்கணங்களோடு பயின்றார்க்கே இவ்வுண்மை யினிது விளங்கும். மாபாஷ்யத்து ஆசிரியர் பதஞ்சலியாரும் இவ்வாறெடுத்துரைப்பர் இவ்வைந்தும் இங்ஙனஞ் சுருங்கி விளங்கிய நடையுடைமையால் கற்பதெளிதாகலின் கற்போரியாவராலும் பாராட்டிக் கற்கப்பட்டு வழங்கிவருவனவாயின.

பொய்யாமொழிப்புலவர் அகப்பொருள் நூல்கள் பல இருப்பவும் இவ்வகப்பொருளையே இலக்கணமாகக்கொண்டு தஞ்சைவாணன் கோவைசெய்தருளினர். இதனானும் இந்நூற்பெருமைவிளங்கும். இங்ஙனந் தனக்கென ஓரிலக்கியமுடைய அகப்பொருளிலக்கணம் வேறின்மை இது நூலாசிரியரிட்டபெயரால் அகப்பொருள்விளக்கமெனவும் இறையனார் அகப்பொருள் முதலியவற்றின் வரைந்து கோடற்கு நம்பி அகப்பொருளெனவும் வழங்கப்படுகின்றது.

இதனைப் பரிசோதிக்குங்காலத்து இந்நூலுட் காணப்பட்ட பாடபேதங்கள் அளப்பில. பயனின்மையின் ஈண்டுக் குறிக்கப்பட்டில. இந்நூலாசிரியர் காலம் முதலியன பாயிரத்தால் சில புலப்படுகின்றன வன்றித் தெளிவாக வேறொன்றும் புலப்படவில்லை. உரையாசிரியரது பெயர்தானு மறிவதரிதாயிற்று.

இவ்வுரையுட் காட்டப்பட்ட உதாரணங்களுட் பெரும்பாலன தஞ்சைவாணன்கோவைச் செய்யுட்கள். சிந்தாமணி சிலப்பதிகாரம் திருச்சிற்றம்பலக்கோவை ஆசாரக்கோவை முதலாகப் பலநூல்கள் ஆங்காங்கு இடையிடையே எடுத்துக் காட்டப்பட்டன. நூற்பெயர்கள் இடையிடையே உரையுட் காணப்படுகின்றன. நூலாசிரியர் பெ

யர்களுஞ் சில காணப்படுகின்றன. இன்னூலகத்தனவென்று புலப்படாத செய்யுட்கள் பல. அடி தொடை பொருள் முதலியன புலப்படாத செய்யுட்கள் அவற்றினும் பல. இவ்வுதாரணச் செய்யுள்களுட் பெரும்பாலன பொருளதிகாரவுரையுள்ளும் இறையனாரகப்பொருளுரையுள்ளும் பிறாண்டும் காணப்படுகின்றன. பாடபேதங்கள் வரம்பிறந்தன. சில செய்யுட்களி னிறுதிப்பாகமும் சில செய்யுட்களின் முதற்பாகமும் ஆங்காங்கு வேண்டப்படுமவ்வளவே உதாரணமாக எடுத்துக் காட்டப்பட்டன. முழுவதும் எடுத்துக்காட்டப்பட்ட செய்யுட்களே பெரும்பாலன.

இவ்வுரையுளெடுத்துக் காட்டப்படுஞ் சூத்திரங்கள் பல தொல்காப்பியத்தன. திருக்கோவையாருரையுட் காணப்படுமாறு போல, வேறு சூத்திரங்களுங் காணப்படுகின்றன. அவையின்ன நூலிலுள்ளனவென்று புலப்படவில்லை ஆயினும் அகத்தியத்திற்கு இந்நூலாசிரியர் பெரும்பொருளெனப் பெயரிட்டு வழங்குதலின் அந்நூற் சூத்திரங்கள் போலும். நூலுரைகளையேனும் உதாரணச் செய்யுட்களையேனும் நிச்சய வடிவம் அறியாது மாற்றுதற்கும் திருத்துதற்கும் கூட்டுதற்கும் அஞ்சி ஒழிந்தேம்.

இந்நூலுரை யிரண்டனையும் இரண்டாம் முறை பதிப்பிக்கக் கருதி அகப்பட்ட பிரதிகளை ஒருவாறு ஒப்பநோக்கி இப்பொழுது பிரதிகளிலிருந்தவாறே பதிப்பிக்கப்பட்டது.

# சூசிபத்திரம்.





# பரிபாஷை.

இ-ம் = இச்சூத்திரம்; இதுசூத்திரம்.

இ-ள் = இதன்பொருள்.

உணா-ற்று = உணர்த்துதனுதலிற்று.

உ-ம் = உதாரணம்.

எ-ம் = எனவும்; எனவரும்.

எ-து = என்பது; என்றது.

எ-று = என்றவாறு.

எ-லின் = என்றாராகலின்.

எ-னின் = என்னெனின்; என்னுதலிற்றோவெனின்.



உ

திருச்சிற்றம்பலம்

# அகப்பொருள்விளக்கம்

## மூலமும் உரையும்.

---

## பாயிரம்.

பூமலி நாவன மாமலைச செனனி
யீணடிய விமையோர வேணடலிற போந்து
குடஙகையின விநத நெடுஙகிரி மிகைதீரத
தலைகட லடககி மலயத திருநத
விருநதவன றனபா லியறறமி ழுணரநத
புலவரபன னிருவருட டலைவ னாகிய
தொலகாப பியனரு ளொலகாப பெருமபொரு
ளகபபொரு ளிலககண மகபபடத தழீஇ
யிகபபருஞ சானறோ ரிலககிய நோககித
தொகுதது முறைநிறீஇச சூததிரம வகுததாங
ககபபொருள விளககமென றதறகொரு நாமம
புலபபடுத திருளறப பொருளவிரித தெழுதினன
மாநதரு தேவரும வாழததமுந குடைககீ
ழேயநதெழி லரிமா னேநதுபொன னணைமிசை
மதிமூனறு கவிபப வுதயமால வரைக
கதிரோன றிருநதெனக காணடக விருநது

தத்துவம் பகர்ந்தோன் சரணம் பொருந்திய
வுத்தமன் புளிங்குடி யுய்யவந் தானென்று
முத்தமி ழாசான் மைந்தனித் தலத்துத்
திருப்பெருங் கலைக்கு மொருபெருங் குரிசில்
பாற்கடற் பல்புகழ் பரப்பிய
நாற்கவி ராச நம்பியென் பவனே.

என்பது பாயிரம். எந்நூலுரைப்பினு மந்நூற்குப் பாயிரமுரைத்தே யுரைக்கப்படும். பாயிரம் என்றும், முகவுரை எ-ம், அணிந்துரை எ-ம், புறவுரை எ-ம், தந்துரை எ-ம், புனைந்துரை எ-ம், பதிகம் எ-ம், வருவனவொருபொருட்கிளவி. அப்பாயிரம் பொதுவுஞ் சிறப்புமென விருவகைத்து. அவற்றுள், பொதுப்பாயிர மென்பதெல்லா நூன்முகத்து மின்றியமையாதது. என்னை? "ஈவோன்றன்மை யீதலியற்கை-கொள்வோன்றன்மை கோடன்மரபென-வீரிரண்டாகும் பொதுவின்றொகையே" என்றாகலின். இனிச் சிறப்புப்பாயிரமென்பது பலவகைத்து. அவற்றுட் சிலவருமாறு "பணிய நூற்பேர்பகர்ந்தோன்பேர்காரணமுந்-தன் னுபயனளவுஞ்சொல்லினன்-முன்னைச்-சிறப்பாமவற்றிற் சிலவேறினும்-பெறப் படுமொழுன்னைப்பெயர்." இவையெல்லாம் பாயிரச்சூத்திரத்தினது பொருளுரைக்கவே விளங்கும்.

(இதன்பொருள்.) பூமிசைநடந்த வாமனைவாழ்த்தி வடமலைச்சென்னி மீண்டிய கடவுளர் வேண்டலிற் போந்து குறைகட லிலங்கையினட்டுகித் தென்மலையிருந்தவருந்தவன் இவ்வியற்றமிழ்கெழீஇய வகப்பொருட்கு இரோகி வழி தொகுத்து விரீஇவகுத்துப் புலப்படுத்தாங் கிகப்பிலகப்பொருள்விளக்கம் பகர்ந்தெழுதினன் செந்தமிழ்நாட்டு மைந்தன் குரிசில் பாற்கடற் பல்புகழ் பரப்பிய நாற்கவிராச நம்பியென்பவனே என்றது இந்திரனிருமிக்கப்பட்ட தெய்வத் தாமரையின்கண்ணெழுந்தருளிய அருகபரமன் ஸ்ரீ பாதங்களை வாழ்த்தி வடமலையின்கண்ணிருந்து வானோர்வேண்டலின் தென்றிசைக்கட்போந்து கடன்முழுவீந்து குடங்கையிலடக்கிப் பொதியமலையின்கணிருந்தவன் செய்த இயற்றமிழைப் பொருந்திய பெரும்பொருளின்கண்ணுண்டாகிய பொருட்டுழுவுதலை நோக்கி யுலகத்தாரறியுமவகைதொகுத்து முறையினிறுத்திக் கிளவிகளையடைவுபட வகுத்துப் புலப்பட இகப்பிலகப்பொருள் விளக்கமென்னும் பேர்கொடுத்து இந்நூல் பகர்ந்தெழுதினன் செந்தமிழ்நாட்டகத்து மைந்தனாகிய குரிசில் பாற்கடல்போலப் பலவகைப்பட்ட புகழை விளக்கிய நாற்கவிராசனென்னுஞ் சிறப்புப்பெயரையுடைய நம்பியென்னு மியற்பெயரையுடையோன் என்றவாறு.

பூமிசைநடந்தவென்னும் பெயரெச்சவினை வாமனென்னும் பெயர்கொண்டு முடிந்தது.* வாழ்த்தியென்னும் வினையெச்சம் பகர்ந்தெழுதினனென்னும்

முற்றுவினை கொண்டது. வடமலையென்புழி யேழாமுருபும் ஆறாமுருபும் சென்னியீனடென்புழி ஏழாமுருபும், வேண்டலிற்போந்தென்புழி மூன்றாமுருபும் தொக்கன. போந்து அடக்கியென்னும் வினையெச்சங்கள் [illegible]காயிருந்தவென்னும் பெயரெச்சத்தோடு முடிந்தன. அப்பெயரெச்சம் அருந்தவனென்னும் பெயர்கொண்டுமுடிந்தது. குடங்கையினென்புழி மூன்றாமுருபு தொக்கது. இயற்றமிழென்புழி இருபெயரொட்டு தமிழையென்றிரண்டாமுருபை விரிக்க. பெரும்பொருளென்புழி ஏழாமுருபுதொக்கது. தழீஇ நோக்கி தொகுத்து நிறீஇ வகுத்துப் புலப்படுத்தி என்னும் வினையெச்சங்கள் எழுதினனென்னும் வினைகொண்டன. ஆங்கு எ-து அசைச்சொல். வாழ்த்திப் பகர்ந்தோனென வியையும். நிறீஇ [illegible]தென்னும் வினையெச்சங்கள் பகர்ந்தெழுதினனென்னுந் தொழிற்பெயரோடு முடிந்தன. வாழ்த்தியென்னும் பிற வினையும் அதனோடுபொருந்தும். மைந்தன் குரிசில் நாற்கவிராசன் என்னு மூவிடத்தும் உம்மை தொக்கன. பரப்பியவென்னும் பெயரெச்சம் நாற்கவிராசனென்னுஞ் சிறப்புப்பெயர்கொண்டது. நாற்கவியாவன ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமென்பனவாம். பாற்கடற் பல்புகழ் பரப்பியென்புழி உவமந் தொக்கது. நம்பி என்னுமியற்பெயர் எழுதினனென்னும் முற்றுவினைப் பயனிலை கொண்டது. ஆக்கியோன்பெயர் நம்பி எ-து. வழி தொல்காப்பியவழி. வழிபலவாயினுந் தொல்காப்பியமுதனூலானமையின் இது சார்புநூலாம். எல்லையுமதனோடேயடங்கும். நூற்பெயர் அகப்பொருள் விளக்கம் எ-து. யாப்பு தொகுத்தியாத்தல் எ-து. நுதலியபொருள் அகத்துப்பொருள் எ-து. கேட்டோர் கற்றுவல்லோர். பயன் வீடுபேறு. காலம் குலசேகரபாண்டியன் காலம். களன் அறிவோரவை. காரணம் கிளவிகளையடைவுபடத் தொகுத்தல் எ-து. இவையெல்லாம் பாயிரத்திலக்கணமெனக் கொள்க. (௧)



முதலாவது

# அகத்திணையியல்.



௧. மலர்தலை யுலகத்துப் புலவோ ராய்ந்த,
வருந்தமி ழகப்பொருள் கைக்கிளை யைந்திணை
பெருந்திணை யெனவெழு பெற்றித் தாகும்.

எ-னின். மேற் பாயிரத்திலக்கண முணர்த்திப் போந்தாம், இனி நூலிலக்கண முரைக்கின்றாம். அஃதுரைக்குங்காலை நூனுதலிய துரைத்தலும், நூலுள் அதிகார நுதலிய துரைத்தலும், அதிகாரத்துள் ஓத்து நுதலிய துரைத்தலும், ஓத்தினுட் சூத்திர நுதலிய துரைத்தலுமென நான்கு வகையா லுரைத்தல் வேண்டும். அவற்றுள், நூனுதலிய துரைத்தலாவது நூலாமாறும் நூலென்ற சொற்குப் பொருளாமாறு முரைத்தல். அவற்றுள் நூலாமா றுரைக்குங்கால் அந்நூன் மூன்று வகைப்படும். அவை முதனூலும் வழிநூலுஞ் சார்பு நூலுமென்பன. என்னை? "முதல்வழி சார்பென நூன்மூன் றாகும்" எ-னின். அவற்றுள் முதனூலாவது, வரம்பிலறிவன் பயந்ததாகும். என்னை? "வினையி னீங்கி விளங்கிய வறிவின் முனைவன் கண்டது முதனூலாகும்" எ-னின். வழிநூலாவது முதனூல்வழித் தப்பாமற் பின்னரும் வேண்டும் விகற்பங் காட்டி வழுவாமற் சொல்லுவது. என்னை? "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப் பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி யழியா மரபினது வழிநூலாகும்" எ-னின். சார்பு நூலாவது அவ்விருவர் நூலின் முடிந்த பொருளை ஒருசார் நோக்கி யொருகோவைப் படவைப்பது. என்னை? "இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித் திரிபுவே றுடையது புடைநூலாகும்" எ-னின். நூலென்ற சொற்குப் பொருளுரைக்குங்காற் றந்திரமென்னும் வடமொழியை நூலென்று வழங்குவது தமிழ்வழக்கெனக் கொள்க. நூனுதலிய துரைத்தலாவது இந்நூலின்னது கருதிற்றென் றுரைத்தல். அது நுதலிற் றென்றுரைத்தலாம். அந்நூன் மூவகைப்படும். அவை இயலும், இசையும், நாடகமுமென்பன. அவற்றுள், இயனூன் மூன்று வகைப்படும். அவை எழுத்துஞ் சொல்லும் பொருளுமென்பன. என்னை? "தமிழ்கூறு நல்லுலகத்து-வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்-எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடி" எ-னின். அஃதேல், யாப்புமலங்காரமு மவற்றினுள் யாதனுள்ளடங்குமோவெனின், அவையிரண்டும் பொருளினுள்ளடங்குமெனக் கொள்க. அதிகார நுதலிய துரைத்தலாவது, இவ்வதிகார மின்னது கருதிற்றென்றல். ஆயினிவ்வதிகார மென்னுதலிற்றோ வெனின் அது பாயிரத்துரைத்துப் போந்தாம். தமிழ் நுதலிற்றென்றல். இவ்வதிகாரம் அகத்திணையியலும், களவியலும், வரைவியலும், கற்பியலும், ஒழிபியலுமென ஐந்தோத்துக் கண்டதாம். அதிகாரத்துளோத்து நுதலிய துரைத்தலாவது இவ்வதிகாரத்து ளிவ்வோத் தின்னது கருதிற்றென்றல். ஆயினிவ்வதிகாரத் தினிவ்வோத் தென்னுதலிற்றோவெனின், அகத்திணையிலக்கண முணர்த்துத-

னுதலிற்றெனக் கொள்க. ஓத்தினுட் சூத்திரநுதலிய துரைத்தலாவது, இவ்வோத்தினுளித்தலைச்சூத்திர மின்னது கருதிற்றென்றல். ஆயினிவ்வோத்தினுளித்தலைச்சூத்திர மென்னுதலிற்றோவெனின், அகப்பொருளிலக்கணமெல்லாந் தொகுத்துணர்த்துதனுதலிற்று. அன்னதாகல் இச்சூத்திரத்துப் பொருளுரைக்கவே விளங்கும் அகப்பொருளுரை நான்குவகைப்படும். அவை கருத்துரைத்தலும், கண்ணழித்துரைத்தலும், பொழிப்புத்திரட்டலும், அகலங்கூறலுமென்பன. என்னை? "கருத்துரை கண்ணழி பொழிப்புத்திரட்-டகலங்கூறலென நால்வகைத்தே-புகலுஞ்சூத்திரப் பொருளுரையென்ப" எ-லின். அவற்றுட் கருத்துரைத்தலாவது சூத்திரத்துட்கோளுரைத்தல். என்னை? "சூத்திரத்துட்கோள் சொல்லல்கருத்துரை" எ-லின். கண்ணழித்தலாவது சூத்திரத்தின் சொற்றொறும் பொருளுரைத்தல். என்னை? "சொற்றொறுஞ் சொற்றொறுந் தனிப்பொருளுரைத்தல்-கற்றறிபுலவர் கண்ணழியென்ப" எ-லின். பொழிப்புத்திரட்டலாவது சூத்திரத்துப் பொருளையெல்லாந் தொகுத்துரைத்தல். என்னை? "பொழிப்பெனப்படுவது பொருந்தியபொருளைப்-பிண்டமாகக்கொண்டுரைப்பதுவே" எ-லின். அகலங்கூறலாவது சூத்திரத்துப்பொருளைத் தூய்மைசெய்தற்குக் கடாவும் விடையுமுள்ளுறுத்து விரித்துரைத்தல். என்னை? "அகலமென்ப தாசறக்கிளப்பின்-விகல்மின்றிவிரித்துரைப்பதுவே" எ-லின். அவற்றுட் கருத்துரை, முற்கூறப்பட்டது. கண்ணழித்துரைக்குமாறு:

மலர்தலையுலகத்து என்பது பரந்தவிடத்தையுடைய தமிழ்நாட்டகத்து என்றவாறு. புலவோராய்ந்தவருந்தமிழகப்பொருள் எ-து தலைச்சங்கத்தோரும் இடைச்சங்கத்தோரும் கடைச்சங்கத்தோருமாகிய சான்றோரா லாராயப்பட்ட வரிய தமிழ்நூலகத்துப்பொருளென்றவாறு. கைக்கிளையைந்திணைபெருந்திணையெனவெழுபெற்றித்தாகும் எ-து கைக்கிளையும் ஐந்திணையும் பெருந்திணையும் என ஏழியல்பினையுடைத்தென்றவாறு. என்னை? "கைக்கிளைமுதலாப் பெருந்திணையிறுவாய்-முற்படக்கிளந்தவெழுதிணையென்ப" எ-லின்.

பொழிப்புத்திரட்டலாவது பரந்தவிடத்தையுடைத்தாகிய தமிழ்நாட்டிடத்து மூன்றுவகைப்பட்ட சங்கத்தோராலாராயப்பட்ட வரிய தமிழ்நூலகத்து அகப்பொருளாவது கைக்கிளையும் ஐந்திணையும் பெருந்திணையுமென ஏழியல்பினையுடைத்தென்றவாறு.

அகலங்கூறுமாறு: சூத்திரத்துள் மலர்தலையென்பதியாதோவெனின் வினைத்தொகையெனக் கொள்க. வினைத்தொகையாவது ஒருகாலத்திற்கேயுரித்தாகாது முக்காலத்திற்கும் பொதுவாய்நிற்பதாம். மூன்றுகாலமாவன இறப்பு எதிர்வு நிகழ்வு என்பன. அஃதவற்றிற்கேற்குங்கால் மலர்ந்த எ-ம், மலராநின்ற எ-ம், மலரும் எ-ம் வரும். அவற்றுளீண்டு மலர்ந்தவென்பதே பொருளாம். மலர்தலையுலகத்தென்புழி இரண்டாமுருபு மேழாமுருபுந் தொக்கன. புலவரென்னுமெழுவாய்க்கு ஆய்ந்தவென்னும் வினை பயனிலையாம். ஆயினும் அதுவே பெயரெச்ச வாய்பாடாதலா னருந்தமிழென்னும் பெயரோடு முடியும். அருந்தமிழகப்பொருளென்புழி ஏழாமுருபு தொக்கது. அகப்பொருளென்னுமெழுவாய் பெற்றித்தென்னுங் குறிப்புவினை கொண்டது. கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணையென உம்மைத்தொகையா யேழென்னுந் தொகைபெற்றன. எனவீது எண்ணிடைச்சொல். (க).

௨. அதுவே, —
புனைந்துரை யுலகிய லெனுந்திற மிரண்டினுந்
தொல்லியல் வழாமற் சொல்லப் படுமே.

இச்சூத்திரம் மேற்சொல்லப்பட்ட வகப்பொருட்குரிய விதியுணர்த்துதனுதலிற்று. அதுவே அவ்வகப்பொருளிலக்கணமுள்ளதாகிய விரண்டுகூறு பாட்டானும் பழைய நெறி பிறழாமற் கூறப்படுமே எ-று. என்னை? "நாடக வழக்கினு முலகியல் வழக்கினும் - பாடல் சான்ற புலனெறி வழக்கினுங் - கலியே பரிபாட்டாயிரு பாங்கினு - முரியவாகுமென்மனார் புலவர்." எ-ன். (௨)

௩. அவற்றுள், —
கைக்கிளை யுடைய தொருதலைக் காமம்.

இ-ம். நிறுத்தமுறையானே கைக்கிளைக்குரிய காமப்பொருளுணர்-ற்று. மேற்சொல்லப்பட்ட வகப்பொருள்விகற்பமாகிய வேழினுட் கைக்கிளையென்பதனுடைய பொருள் ஒருதலைக்காமம் எ-று.

அவற்றுள் என்பதனை மேல்வருஞ் சூத்திரமிரண்டற்குங் கூட்டியுரைக்க (௩)

௪ ஐந்திணை யுடைய தன்புடைக் காமம்.

இ-ம். ஐந்திணைக்குரிய காமப்பொருளுணர்-ற்று. ஐந்திணையென்பதனுடையபொருளன்புடைக்காமம். எ-று. (௪)

௫ பெருந்திணை யென்பது பொருந்தாக் காமம்.

இ-ம். பெருந்திணைக் காமப்பொருளுணர்-ற்று. பெருந்திணையென்பதனுடையபொருள் பொருந்தாக்காமமாம். எ-று. இவற்றின் விகற்பமெல்லாம் மேலே காட்டப்படும் (௫)

௬. குறிஞ்சி பாலை முல்லை மருத
நெய்த லைந்திணைக் கெய்திய பெயரே.

இ-ம். நிலம் வகுக்கப்படாத கைக்கிளையும் பெருந்திணையுமொழித்து நிலம் வகுக்கப்படும் ஐந்திணைக்குரிய பெயருணர்-ற்று. குறிஞ்சியும் பாலையும் முல்லையும் நெய்தலுமாம் ஐந்திணைக்குப் பொருந்தியபெயர்கள். எ-று. என்னை? "மாயோன்மேய காடுறையுலகமுஞ்-சேயோன்மேய மைவரையுலகமும்-வேந்தன் மேய தீம்புனலுலகமும்-வருணன்மேய பெருமணலுலகமும்-முல்லைகுறிஞ்சிமருத நெய்தலெனச்-சொல்லியமுறையாற் சொல்லவும்படுமே" மற்றிதனுட் பாலைக்குத் திணையில்லைபாலெனின், அது நிலனின்மையாலொழிக்கப்பட்டதெனக் கொள்க. அஃதேலீண்டுக்கூறியதென்னையெனின் மதுரைக்காஞ்சியுட் "பாலை சான்றசுரஞ்சேர்ந்தொருசார்" என்பதனானும் பிறவாற்றானுங் கொள்ளப்பட்டதெனக்கொள்க. அஃதற்றாக, முல்லை குறிஞ்சி மருதநெய்தலென்றிம்முறையெனாது குறிஞ்சிபாலைநெய்தலென வெண்ணியதென்னையெனின் அச்சூத்திரத்

திற ''சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே'' என்ற வும்மையாற் பிறவாற்றானுஞ் சொல்லவும்படுமென்பது பட நிற்றலானும், பத்துப்பாட்டும், கலித்தொகையும், ஐங்குறுநூறும், கீழ்க்கணக்கும், சிற்றட்டகமுமுதலாகிய சான்றோர்செய்யுட்களெல்லாம் வேண்டிய முறையானே வைத்தலானு மவற்று ளெண்ணப்பட்டதெனக்கொள்க. மற்றிக்குறிஞ்சி முதலாகிய [illegible]ா நிலங்கட்செய்தியவாறென்னையெனின் உலகத்தார் வழங்கிப்போந்த முறைமையாமெனக் கொள்க. அன்றிக் குறிஞ்சியும் பாலையு முல்லையு மருதமும் நெய்தலுமென்னும் பொருள்கள் அவ்வந்நிலத்திற்குச் சிறந்தனவாதலா னவற்றாற் பெற்ற பெயரெனவுமாம். ''கருங்கோற் குறிஞ்சிப்பூக்கொண்டு- பெருந்தேனிழைக்கும்'' எ-ம், 'கோடுறுபல காயவாவிணர்ப்பாலை'' எ-ம், ''முல்லையந்தண்பொழில்'' எ-ம், ''மருதமர் நிழல்'' எ-ம், ''பாசடை நிவந்தகணைக்கானெய்தல்'' எ-ம் சான்றோரெடுத்துக் கூறப்படுதலினெனக் கொள்க. இவையா[illegible]யராம். (௬)

௭ அவைதாம்,—

முதற்பொருள் கருப்பொரு ளுரிப்பொரு ளென்முறை
நுதற்பொருண் மூன்றினு நுவலப் படுமே.

இ-ள். ஐந்திணைக்கும் பொதுவாகிய பொருளுணர்-று. மேற்சொல்லப்பட்ட குறிஞ்சிமுதலாகிய ஐந்திணைதாம், முதற்பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளுமென் முறையானே கருதுதலையுடைய பொருண் மூன்றானுஞ் சொல்லப்படும். எ-று. என்னை? ''முதல்கருவுரிப்பொருளென்ற மூன்றே- நுவலுங்காலை முறைசிறந்தனவே- பாடலுட்பயின்றவைநாடுங்காலை'' எ-வின். அவைதாம் நுவலப்படுமெனக் கூட்டுக. என எ-து எண்ணிடைச்சொல். (௭)

௮ நிலமும் பொழுதுமென முதலிரு வகைத்தே.

இ-ம். நிறுத்த முறையானே முதற்பொருளின் பாகுபாடுணர்-று. முதற்பொருளாவது நிலமும் பொழுதுமென இரண்டு கூற்றினையுடைத்தாம். எ-று. என்னை? ''முதலெனப்படுவது நிலம்பொழுதிரண்டி-னியல்பென மொழிப வியல்புணர்ந்தோரே'' எ-வின் (௮)

௯. வரையே சுரமே புறவே பழனந்
திரையே யவையவை சேர்தரு மிடனே
யெனவீ ரைவகைத் தனைய நிலமே.

இ-ம். முதற்பொருளின் பாகுபாடாகிய விரண்டனுள்ளு முன்னதாகிய நிலத்தின் வரையறையுணர்-று. மேற்சொல்லப்பட்ட வியல்பினையுடைய நிலமென்னுமுதற்பொருள் வரையும், வரைசார்ந்தவிடமும், சுரமும், சுரஞ்சார்ந்தவிடமும், புறவும், புறவுசார்ந்தவிடமும், பழனமும், பழனஞ்சார்ந்தவிடமும், கடலும், கடல்சார்ந்தவிடமும், என்பத்துவகையினையுடைத்து. எ-று. இவற்றிற்கு விதி மேலே காட்டப்பட்டன. இவற்றை ஐந்திறத்தும் நிரனிறையாகக் கொள்க. புறவெனினுங் காடெனினுமொக்கும். பழனமென்புழி ஏகாரந்தொக்கதாயினுங் குற்றமின்றாம். என்னை? ''எண்ணேகாரமிடையிட்டுக்கொளினு- மெண்ணுக்குறித்தியலுமென்மனார் புலவர்'' என்றலின். அனையவியலென்றற்பாலது அனையியலென விகாரமாயிற்று (௯)

க0 பெரும்பொழு தென்றா சிறுபொழு தென்றா
இரண்டு கூற்ற தியம்பிய பொழுதே

இ-ம். பொழுதென்னு முதற்பொருளின் பாகுபாடுணா-ற்று. மேற்சொல்லப்பட்ட பொழுதென்னு முதற்பொருள் பெரும்பொழுதென்றுஞ் சிறுபொழுதென்று மிரண்டுபகுதியினையுடைத்து எ-று. என்றா எ-து எண்ணிடைச்சொல். (க0)

கக. காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள வேனில் வேனி லென்றாங்
கிருமூன் றிறத்தது தெரிபெரும் பொழுதே.

இ-ம். நிறுத்தமுறையானே பெரும்பொழுதினது பாகுபாடுணா-ற்று. காரமுதலாக வேனிலீறாகச் சொல்லப்பட்ட ஆறுபகுதியினையுடைத்தாம், புலவராணாராயப்பட்ட பெரும்பொழுது. எ-று. ஆங்கு எ-து அசை. (கக)

கஉ. மாலை யாமம் வைகறை யெற்படு
காலை வெங்கதிர் காயுநண் பகலெனக்
கைவகைச் சிறுபொழு தைவகைத் தாகும்.

இ-ம். சிறுபொழுதின் பாகுபாடுணா-ற்று. மாலைமுதலாக நண்பகலீறாகச் சொல்லப்பட்ட ஐவகையினையுடைத்தாம் அவ்வொழுக்கத்திற்குரிய சிறுபொழுது. எ-று. அவற்றுள் மாலையாவது உச்சிக்குப் பின்னும் ஆதித்தனடுவதற்கு முன்னுமுண்டாகிய காலம். யாமமாவது இடையிரவு. வைகறையாவது விடியற்காலம். எற்படுகாலையாவது ஆதித்தன்படுகிறபொழுது. நண்பகலாவது உச்சிப்பொழுது. கை எ-து ஒழுக்கம். (கஉ)

கங. அவற்றுள்,—
கூதிர் யாம முன்பனி யென்றிவை
யோதிய குறிஞ்சிக் குரிய வாகும்.

இ-ம். குறிஞ்சிக்குரிய பெரும்பொழுதுஞ் சிறுபொழுதுமுணா-ற்று. பெரும்பொழுதுஞ் சிறுபொழுதுமாகிய பதினொன்றுள்ளுங் கூதிரும் யாமமும் முன்பனியுமாகிய மூன்றும் மேற்சொல்லப்பட்ட குறிஞ்சிக்குரியவாம். எ-று. இதனுட் பெரும்பொழுதாகிய முன்பனியைக் கூதிரொன்பதனோடுசேரக் கூறாது, யாமமாகிய சிறுபொழுதின் பின்கூறியதென்னையெனின், அது கூதிரின்றுணைச்சிறப்புடைத்தன்றென்றவாறு கூறப்பட்டதெனக் கொள்க. வருஞ்சூத்திரத்திற்கு மொக்கும். (கங)

கச. வேனி னண்பகல் பின்பனி யென்றிவை
பான்மையி னுரிய பாலை தனக்கே.

இ-ம். பாலைக்குரிய பெரும்பொழுதுஞ் சிறுபொழுதுமாறுணா-ற்று. பாலைக்கு வேனிலும், நண்பகலும், பின்பனியுமாகிய மூன்றும் விதியானுரிய

வாம், எ-று. அகத்திணை சிறப்புடைமையும் சிறப்பின்மையும் எற்றாற் பெறுதுமெனின், "குறிஞ்சி-கூதிர்யாமமென்மனார்புலவர்" எ-ம, "முனபனிதானு முரித்தெனமொழிப" எ-ம், "பனியெதிர்பருவமுமுரித்தெனமொழிப", எ-ம, "நடுவுநிலைத்திணையே நண்பகல்வேனிலொடு-முடிவுநிலைமருங்கின் முன்னியநெறித்தே" எ-ம கூறியவதனாற் பெறுதுமெனக் கொள்க. (கச)

கரு. மல்குகார் மாலை முல்லைக் குரிய.

இ-ம் . முல்லைக்குரிய பெரும்பொழுதுஞ் சிறுபொழுதுமுணா-றறு. மிகாநின்ற கார்காலமும மாலைக்காலமுமாகிய இரண்டுகாலமும முல்லைக்குரிய, எ-று. எனனை? "காருமாலையுமுல்லைக்குரிய" என்றார். (கரு)

கசு. இருளபுலர் காலை மருதத்திற் குரித்தே.

. இ-ம். மருதத்திற்குரிய சிறுபொழுதுணா-றறு மருதத்திற்கு விடியற் காலமுரித்து. எ-று எனனை? "வைகறைவிடியன்மருதமெனப" எ-லின. ()

கஎ. வெயயோன் பாடு நெய்தற் குரித்தே.

இ-ம நெயதறகுரிய சிறுபொழுதுணா-றறு. ஆதித்தன படுகின்றகாலம் நெயதறகுரித்து. எ-று. எனனை? "எறபாடு-நெயதலாதன மெயபெறததோன றும" எ-லின. (கஎ)

கஅ மருத நெய்த லெனறிவை யிரணடிறகு
முரிய பெருமபொழு திருமூன றுயமே.

இ-ம் மருததிறகும நெயதறகும் உரிய பெருமபொழுதுணர்-றறு. மருதமுநெய்தலு மெனனுமிரணடிறகும பெருமபொழுதாறு முரியவாம. எ-று. இஃதெறறாற பெறுதுமோவெனின ஞாபகத்தாற பெறுதுமெனக கொளக. அஃதியாதோவெனின, ஏனை மூனறிறகும பெருமபொழுது கூறிபபோநதாா மருதத்திறகும நெயதறகும பெருமபொழுது கூறாததனாலெனக கொளக. அதனாற பெருமபொழுதாறு முரியவெனக கொளக. (கஅ)

ககூ. ஆரணங குயாந்தோ ரலலோா புளவிலங்
கூாநீா பூமா மிறுபபறை யாழபண
டொழிலெனக் கருவி ரெழுவகைத் தாகும்.

இ-ம். கருபபொருளின பாகுபாடுணா-ற்று. தெயவமுதலாகத் தொழி லீறாகச சொலலபபடட பதினனகுவகையினையுடைததாங் கருப்பொருள. எ று எனனை? "தெயவமுணாவே மாமரமபுடபறை-செய்தியாழின பகுதியொடுதொகைஇ-யவவகைபிறவுங்கருவெனமொழிப" எ-லின். மறறிக கருபபொருள பதினனகென்று வரையறுத்ததெனனை? இதனுளேதேதாதபபடடன கெட்டலலவோவெனின, ஒழிந்த ஆறும இசசுத்திரத்துப் பிறவெனனு மிலேசினே பெறப்படடன. (ககூ)

௨0. விறற்சேய் பொருப்பன் வெற்பன் சிலம்பன்
குறத்தி கொடிச்சி குறவர் கானவர்
குறத்தியர் கிளிமயில் மறப்புலி குடாவடி
கறையடி சீயஞ் சிறுகுடி யருவி
நறுஞ்சுனை வேங்கை குறிஞ்சி காந்
ளாரந் தேக்ககி லசோக நாகம்
வேர லைவனந் தோரை யேனல்
கறங்கிசைத் தொண்டகங் குறிஞ்சியாழ் குறிஞ்சி
வெறிகோ ளைவனம் வித்தல் செறிகுரற்
பைந்தினை காத்தல் செந்தே னழித்தல்
செழுங்கிழங் ககழ்தல் முழங்கிவீ ழருவியொடு
கொழுஞ்சுனை யாடல் குறிஞ்சிக் கருப்பொருளே.

இ-ம். குறிஞ்சிக் கருப்பொருளுணா-றறு. சேய முதலாகச் சுனையாடலீறாகச் சொல்லப்பட்டனவெல்லாம் குறிஞ்சிக் கருப்பொருளாம். எ-று. (௨0)

௨௧. கன்னி விடலை காளை மீளி
யினனைகை யெயிற்றி யெயின ரெயிற்றியா
மறவர் மறத்தியர் புறவுபருந் தெருவை
கழுகு செந்நாய் கலகெழு குறும்பு
குழிவறுங் கூவல் குராஅ மராஅ
வுழிஞை பாலை யோமை யிருப்பை
வழங்குகதிக் கொண்டனை செழும்பதிக் கவர்தல்
பகைத்துடி பாலையாழ் பஞ்சுரம் வெஞ்சமம்
பகற்சூறை யாடல் பாலைக் கருப்பொருளே.

இ-ம். பாலைக்குரிய கருப்பொருளுணா-றறு. கன்னிமுதலாகச் சூறையாடலீறாகச் சொல்லப்பட்டனவெல்லாம் பாலைக்கருப்பொருளாம். எ-று. ()

௨௨. நெடுமால் குறும்பொறை நாடன் றோன்றல்
மடிவில் கற்பின் மனைவி கிழத்தி
யிடைய ரிடைச்சிய ராய ராய்ச்சியர்
கான வாரண மான்முயல் பாடி
குறுஞ்சுனை கானியாறு குல்லை முல்லை
நிறங்கிளர் தோன்றி பிறங்கலர்ப் பிடவங்
கொன்றை காயா ...றலங் குருந்...

தாற்றுக்கதிர் வரகொடு சாமை முதிரை
யேற்றுப்பறை முல்லை யாழ் சாதாரி
சாமை வரகு தாமுடன் வித்த
லவைகளை கட்ட லரிதல் கடாவிடல்
செவிகவர் கொன்றைத் தீங்குழ லூதன்
மூவின மேய்த்தல் சேவினந் தழுவல்
கழுமிய குரவையொடு கானயா றெனறிவை
முழுதுட னுடன் முல்லைக் கருப்பொருளே.

இ-ம். முல்லைக்குரிய கருப்பொருளுணர்-றறு. நெடுமான் முதலாகக் கானயாறுஈறாகச் சொல்லப்பட்டனவெல்லாம் முல்லைக்கருப்பொருளாம். (௨௨)

௨௩. இந்திர னூரன் பைந்தார் மகிழ்நன்
கெழுதகு கற்பிற் கிழத்தி மனைவி
யுழவ ருழத்தியர் கடையர் கடைச்சியர்
மழலைவண் டானை மகன்றி னாரை
யன்னம் போதா நன்னிறக் கம்புள்
ளுருகு தாரா வெருமை நீர்நாய்
பெருகிய சிறப்பிற் பேரூர் மூதூ
ராறு மனைக்கிண றிலஞ்சி தாமரை
நாறிதழ்க் கழுநீர் குறுமலர்க் குவளை
காஞ்சி வஞ்சி பூஞ்சினை மருதஞ்
செந்நெல் வெண்ணெ லந்நெ லரிகிணை
மன்றல் முழவு மருதயாழ் மருத
மன்றணி விழாக்கொள்ளல் வயற்களை கட்ட
லரிதல் கடாவிட லகன்குளங் குடைதல்
வருபுன லாடன் மருதக்கருப் பொருளே.

இ-ம். மருதநிலத்திற்குரிய கருப்பொருளுணர்-றறு. இந்திரன்முதலாகப் புனலாடலீறாகச் சொல்லப்பட்டனவெல்லாம் மருதநிலத்திற்குரிய கருப்பொருளாம். எ-று. (௨௩)

௨௪. வருணன் சேர்ப்பன் விரிதிரைப் புலம்பன்
பருமவல் குறப் பரத்தி நுளைச்சி
நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்திய
ரளவ ரளத்திய ரலைகடற் காக்கை

சுறவம் பரக்கும் பெறலரும் பட்டினம்
முவர்நீர்க் கேணி கவர்நீர் நெய்தல்
கண்டகக் கைதை முண்டக மடம்பு
கண்டல் புன்னை வண்டிமிர் ஞாழல்
புலவுமீ னுணங்கல் விலைகளிற் பெற்றன
ளிமீன் கோட்பறை நாவாய்ப் பம்பை
விளரியாழ் செவ்வழி மீனுப்புப் படுத்த
லுணங்கலை விற்றன மீனுப்புக் கலப்புள் ளோப்ப
னெடுங்கட லாட னெய்தற் கருப்பொருளே.

இ-ம். நெய்தற்குரிய கருப்பொருளுணா-ற்று. வருணன் முதலாகக் கடலீறாகச் சொல்லப்பட்டனவெல்லாம் நெய்தற்கருப்பொருளாம் எ-று இச்சூத்திரங்களிலே தெய்வ முதலாகத் தொழிலீறாகச் சொல்லப்பட்ட கருப்பொருள் பதினான்கு முறையானே கண்டுகொள்க (உச)

உரு. புணர்தலும் பிரிதலு மிருத்தலு மூடலு
மிரங்கலு மிவற்றி னிமித்தமு மெனவாங்
கெய்திய வுரிப்பொரு ளையிரு வகைத்தே.

இ-ம். உரிப்பொருளின் பாகுபாடுணா-ற்று. மேலெய்திய வுரிப்பொருள் புணர்தலும், புணர்தனிமித்தமும், பிரிதலும், பிரிதனிமித்தமும், இருத்தலும், இருத்தனிமித்தமும், ஊடலும், ஊடனிமித்தமும் இரங்கலும், இரங்கனிமித்தமும் எனப் பத்துவகையினையுடைத்து எ-று எனவே? "புணர்தல் பிரிதலிருத்த லிரங்க-லூட லிவற்றி னிமித்த மென்றிவை-தேருங்காலைத் திணைக்குரிய பொருளே" எ-லின. இச்சூத்திரத்தானும் ஐந்திணை வேண்டிய முறையானே யெண்ணலாமென்பது பெறப்பட்டது.

அவற்றுட் குறிஞ்சிக்குதாரணம் வருமாறு "இன்னிசை யுருமொடு கனைதுளி தலைஇ-மன்னுயிர் மடிந்த பானாட் கங்குற்-காடுதேர் வேட்டத்து விழியிடம் பெறாஅது- விரியதள் படுத்த சேக்கைத் தெரியிழைத்-தேனுறு கதுப்பிற் கொடிச்சியார் தந்தை- கூதிர் றிரியுங் குன்றநாட-வந்துவந் திளமுலை நெருங்கப் புல்லுழி-விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்ற-நின்மார் படைத்தலி னினிதாகின்றே-நும்மில் புலம்பினு முள்ளுதொ றுநலியுந்- தண்வரலசைஇய பண்பில் வாடை-பதம்பெறு கல்லா திடம்பார்த்து நீடிய-மனைமர மொசிய வொற்றிப்-பலர்மடி கங்குலி னெடும்புற நிலையே" எ-ம்,

பாலைக்குதாரணம் "அறியாய்வாழி தோழியிருளற-விசும்புடன் விளங்கும் விரைசெலற் றிகிரிக்- கடுங்கதிரெறிப்ப விடுவாய்நிறைய-நெடுங்கான முருங்கை வெண்பூத்தாஅய-நீரற வறந்த நிரம்பா நீளிடை- வள்ளெயிற்றுச் செந்நாய் வருந்துபசிப் பிணவொடு -கள்ளியங்காட்ட கடத்திடையுழிஞில்- லுள்ளூழ் வாடிய சுரிமூக்குநொள்ளைப் - பொரியரை புதைத்த புலம்புகொளியவின- விழுத்தொடை மறவர் வில்லிடை வீழ்ந்தோர் - செழுந்தலைநடுகல்

வின்னிழல்வதியு - மருஞ்சுரக்கவலை நீந்தியென்று - மிவ்வோர்க்கிவ்வென்றியைவதுகாதல்-வல்லோர்நெஞ்சம் வலிப்பமயினும்-பெருவேர்காதலர் காத-லருவேர்காதலென் றறிவீயே" எ-ம்,

முல்லைக்குதாரணம்: "முல்லைவைந்நுனிதோன்றவில்லமொடு - பைஞ்காற்கோனறை மென்பிணியவிழ - விரும்புரித்தன்ன மாயிருமருப்பிற் பரலவலடைய விரலைதெறிப்ப-மலாநதஞாலம புலம்புறவகொடுப்பக்-கருவிவானங் கதழுறைசிதறிக்- காரசெய்தனறே கவின்பெறுகானங் - குரங்குளைப்பொலிந்த கொய்சுவற்புரவி - நரம்பார்த்தன்ன வாங்குவள்பரியப் - பூத்தபொங்கர் துணையொடுவதிந்த - தாதுணபறவை பேதுறலஞ்சி-மணிநாவார்த்த மாணவினைத்தேரி-னுருககாணடோனுங குறும்பொறைநாடன்-கறங்கிசைவிழவி னுறந்தைக்குணாது-நெடும்பெருங்குன்றத் தமனறகாந்தட்-போதவிழலரினா று-மாய்தொடிமரிவைநின் மாணலமபடர்ந்தே" எ-ம்,

மருதத்திற்குதாரணம்: "நெடுங்கோடுநடங்குழியமதூ-நாட்டுறைப்பட்ட மோட்டிருவராஅற் - றுடிக்கட்கொழுங்குறை கொடுத்துணடாடி - வேட்டமறந்த துஞ்சுங்கொழுநாக்குப - பாட்டியரம்பைப் பகலிலவெஞ்சோறு - திமபுளிப்பாமபின றிரள்கனியளைஇ-வியலவைகறை விடுமூதூர்தொடு-கலங்குறுகலங்கு று கலாரறநகை- க்ணகவினழிந்த கனற்பற்றெவ்வா-வெனறுலநதழுவி முயங்கியமாறே" எ-ம்,

நெய்தற்குதாரணம்: "கானலமலர்ந்த கழிபபூக்கூம்ப- நீனிறப் பெருங்கடல் பாடெழுந்தொலிப்ப - மீனார்குருகின மெனபறைதெ ழுதி - குவையிருமபுனனைக் குடமபைசேர-வசைவணடார்க்கு மலகுறுகாலைத்-தாழைத்தளரத் தூக்கிம லை-யழிதகவந்த கொண்டலொடுகழிபடா- காமநெஞ்சம கையறுபடையத்- துயரஞசெய்தம மறுளாராயினு-மறுஅலியரோ வவருடைக்கேணமை-யளியின்மையி னவணுறைவுமுனைஇ-வாரறகிலல தோழிகழனி வெண்ணெலரிஞர் பின்றைததமபுர்-தண்ணுமைவெரீஇயதடநதாளாரை- செறிமடைவயிரிற பிதறறிபபெணணை - யகமடறசேக்கு நதுறைவ-னின்றுயினமாயிற சென்றவெனனெஞசே" எ-ம வரும். இவற்றுன் முதலுங கருவு முரிப்பொருளும் வநதவாறு கணடுகொளக. (உ௫)

உசா. அளவி லினபத் தைநதிணை மருங்கிற்
களவுகற பெனவிரு கைகோள் வழங்கும

இ-ம. ஐந்திணைக்குரிய கைகோள்வரையறையுணர்-ற று. எல்லையில்லாத வின்பத்தையுடைய ஐந்திணையிடத்துக் களவுங கறபுமென விரணடொழுகக நிகழும. எ-று. களவுங கறபுமென உமமையை விரிகக கைகோள்-ஒழுககம. (உசா)

உஎ. இயற்கைப புணாச்சி யிடந் தலைப்பாடு
பாஙகற கூட்டம பாஙகியிற கூட்டமென
றுணாத்திய களவிற புணாசசிநால வகைத்தே.

இ-ம். கிறத்த முறையானே களவென்னுங் கைகோளிற புணாச்சியுணா-ற று. மேறசொல்லபபட்ட களவென்னுங கைகோளிற் புணாச்சி

இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கற்கூட்டமும் பாங்கியிற் கூட்டமுமென நான்குவகையினையுடைத்தாம். எ-று. என்னை? "காமப் புணர்ச்சியு மிடந்தலைப் பாடும் பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென் றாங்கநால் வகையு மடைந்த சார்பொடு மறையென மொழிதல் மறையோர் ஆறே" எ-வின். (௨௭)

௨௮. மெய்க்கிளை யாழோர் வேண்டும புணர்ச்சிமுன
கைக்கிளை நிகழ்தல் கடனென மொழிப.

இ-ம். கைக்கிளை நிகழுமிடமுணா-ற்று. பொழிப்பு மெய்க்கிளை நரம்பினை யுடைய யாழினையுடைய காந்தருவர் விரும்புங் களவிற்புணர்ச்சிமுன் கைக் கிளை நிகழ்தல் கடனென்று சொல்லுவர் புலவர். எ-று. (௨௮)

௨௯. அதுவே,—
காமஞ்சான்ற விளமை யோள்வயிற்
குறிப்பறி காறுங் குறுகாது நின்று
குறிப்பொடு நெஞ்சொடு கூற லாகும.

இ-ம். கைக்கிளைக்குரிய விலக்கணமுணர்-ற்று. மேற்சொல்லப்பட்ட கைக்கிளையாவது காமநுகர்தற்கமைந்த இளமையையுடைய தலைமகளிடத் துண்டாகிய குறிப்பினைத் தானறியுமளவுந் தலைமகனவளைச் சாராதுநின்று தனவசமாம் நெஞ்சொடு சொல்லுதலாம. எ-று. (௨௯)

௩௦ மறையோர் மன்னர் வணிகர் சூத்திரரென்று
இறையோர் தத்தமக் கெய்து மற்றதுவே.

இ-ம். கைக்கிளைக்குரிய தலைமக்களையுணர்-ற்று. மேற்சொல்லப்பட்ட கைக்கிளை மறையோரும, மன்னரும, வணிகரும, சூத்திரருமென்னு நால் வகைத் தலைமக்கட்கும் கூடுவதாம. எ-று. (௩௦)

௩௧. அதுவே,—
மொழிந்தோர் நால்வரு மொழிந்த நிலத்துறை
யிழிந்தோர் தம்மு ளுயர்ந்தோரு மெய்துப.

இ-ம் கைக்கிளைக்கெய்துவதோர் வேறுபாடுணர்-ற்று. மேற்சொல்லப்பட்ட கைக்கிளையை நால்வகைத் தலைமக்களுமன்றி ஐந்நிலத்துமுறையு நிலமக்களுட் டலைமக்களும் பெறுவர். எ-று. உடைமையிழிபுசிறப்பாதலிற் சிறுபான்மை நோக்கினின்றதெனக் கொள்க. (௩௧)

௩௨. தெய்வந் தன்னி னெய்தவுங் கிழத்தியி
னெய்தவும புலவோ ரியற்கைப புணர்ச்சி.

இ-ம். இயற்கைப்புணர்ச்சிக் கிலக்கணமுணர்-ற்று. மேற்சொல்லப்பட்ட நால்வகைப் புணர்ச்சியுள்ளு மியற்கைப்புணர்ச்சியாவது, தெய்வத்தாற் பெறவும்படும், தலைமகளாற் பெறவும்படும் எ-று. படுமென்பதனையிரண்டிடத்துங் கூட்டுக. (௧௨)

௧௩. இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தி னெய்துழி
முயற்சி யின்றி முடிவ தாகும்.

இ-ம். இயற்கைப்புணர்ச்சிக் கெய்தியதன்மேற் சிறப்புணர்-ற்று. இவ்வியற்கைப்புணர்ச்சி தெய்வத்தாற் பெறுங்காலத்து முயற்சியின்றித் தானேமுடிவதாம். எ-று எனவே யப்புணர்ச்சி தலைமகளாற் பெறுங்காலத்து முயற்சியானே முடிவதென்பதாயிற்று. முயற்சியின்றி முடிவதற்குச் சொல்லிய முயற்சி வலலேபெற்றுழியெனபதாம். (௧௩)

௧௪. உள்ளப் புணர்ச்சியு மெய்யுறு புணர்ச்சியுங்
களவுப் புணர்ச்சியுட் காதலற் குரிய.

இ-ம். எய்தாததெய்துவித்தலுதலிற்று. உள்ளத்தாற் புணரும் புணர்ச்சியு மெய்யுற்றுப்புணரும் புணர்ச்சியுமென்னு மிரண்டுந் தலைமகற்குரியவாம் களவிற் புணர்ச்சிக்கண். எ-று. கள்ளம் எ-து களவு. (௧௪)

௧௫. பெருமையு முரனுந் தோன்றற் குரிமையு
மச்சமு நாணு மடனு
மன்னிய குணங்க ளாதலின் முன்ன
ருள்ளப் புணர்ச்சி யுரிய தாகும்.

இ-ம். உள்ளப்புணர்ச்சி நிகழுமிடமுணர்-ற்று. பெருமையுமுரனுந் தலைமகற்கு நிலைபெற்ற குணமாதலானும், அச்சமும் நாணும் மடனுந் தலைமகட்கு நிலைபெற்ற குணமாதலானும் மேற்சொல்லப்பட்ட இரண்டு புணர்ச்சியுள்ளும் உள்ளப்புணர்ச்சி முன்னிகழ்தற்குரித்தாம். எ-று உரனெனினும் அறிவெனினுமொக்கும் பெருமை எ-து பழியும் பாவமுமஞ்சுதல். அறிவு எ-து தக்கவறிதல். அச்சம் எ-து காணாததொன்று கண்டாற் பெண்டிரிடத்து நிகழ்வது. நாணம் எ-து பெண்டிர்க் கியல்பாகிய குணம், மடம் எ-து பேதைமையெனக்கொள்க. அவையவர்க்குக் குணமானவாறென்னையெனின் "பெருமையு முரனு மாடூஉ மேன" எ-ம், "அச்சமு நாணு மடனுமுந்துறுதல் நிச்சமும் பெண்பாற் குரியவென்ப" எ-ம் சொன்னாராகலி னெனக் கொள்க. (௧௫)

௧௬. காட்சி முதலாச் சாக்கா டீறாக்
காட்டிய பத்துங் கைவரு மெனினே
மெய்யுறு புணர்ச்சி யெய்துதற் குரித்தே.

இ-ம். மெய்யுறுபுணர்ச்சி நிகழுமிடமுணர்-ற்று. காட்சியும் வேட்கையும் ஒருதலையுள்ளுதலும், மெலிதலும், ஆக்கஞ்செப்பலும், நாணுவரை யிறத்தலும், நோக்குவவெல்லா மவையேபோறலும், மறத்தலும், மயக்கமும், சாக்காடுமென்னும் பத்தவத்தையுமொருங்கு நிகழுமனவாயிற்றலைமகற்கு மெய்யுறுபுணர்ச்சி கூடுதற்குரித்தாம். எ-று.

அவற்றுட் காட்சியாவது தலைமகளைத் தலைமகன் றனியிடத்துக் காண்டல். வேட்கையாவது இவளைப்பெறவேண்டுமென்னு முள்ளநிகழ்ச்சி. ஒருதலையுள்ளுதலாவது இடைவிடாது நினைத்தல். மெலிதலாவது உடம்பு வாடுதல். ஆக்கஞ்செப்பலாவது தன்னெஞ்சின்கண் வருத்தமிருக்கின்றபடியைப் பிறர்க்குரைத்தல். நாணுவரையிறத்தலாவது நாணத்தினெல்லையைக் கடத்தல். நோக்குவவெல்லாமவையேபோறலாவது காணுமவையெல்லா மவளுறுப்புக்கள்போலத் தோன்றுவது. மறத்தலாவது அறிவு திரிதல். மயக்கமாவது மோகித்தல். சாக்காடாவது இறந்துபடுதல். சாக்காடொழிந்த ஒன்பதும் மேலே காட்டுதும்.

அஃதே லிவற்றுக் கிலக்கண மியாண்டுப் பெறுதுமெனின் "ஒத்தகிழவனுங் கிழவியுங் காண்ப - மிக்கோனாயினுங் கடிவரையின்றே" எ-ம், "வேட்கையொருதலையுள்ளுதன்மெலித-லாக்கஞ்செப்பனாணுவரையிறத்த-னோக்குவ வெல்லா மவையேபோறன-மறத்தன் மயக்கஞ் சாக்காடெனச்-சிறப்புடைமரபி னவைகளவெனமொழிப" எ-ம் வந்த சூத்திரங்களாற் பெறுதுமெனக் கொள்க. (௩௬)

௩௭. பகற்குறி யிரவுக் குறியெனும் பான்மைய
புகற்சியி னமைந்தோர் புணர்ச்சிநிகழ் விடனே.

இ-ம். குறியின் பாகுபாடுணர்-ற்று. அன்பினாலமைந்தோர் புணர்ச்சி நிகழுமிடம் பகற்குறி யிரவுக்குறி யென்னும் பகுதியினையுடையதாம் எ-று. (௩௭)

௩௮. இல்வரை யிகந்தது பகற்குறி யிரவுக்குறி
யில்வரை யிகவா வியலிற் றாகும்.

இ-ம். குறிகட்கிலக்கணமுணர்-ற்று. பகற்குறியில்லினெல்லையைக் கடந்ததாம். இரவுக்குறியில்லினெல்லையைக் கடவாததாம். எ-று. (௩௮)

௩௯. ஒருவழித் தணத்தல் வரைவிடை வைத்துப்
பொருள்வயிற் பிரிதலென் றிருவகைத் தாகு
நிறைதரு காதன் மறையினிற் பிரிவே.

இ-ம். களவியற்பிரிவு வகையுணர்-ற்று. ஒருவழித்தணத்தலும் வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதலு மென்னுமிரண்டுபகுதியினையுடைத்தாம் நிறைந்த காதலினையுடைய களவின்கட் பிரியும் பிரிவு. எ-று.

அவற்றுள் ஒருவழித்தணத்தலாவது ஒரூரின்கண்ணும் ஓர்நாட்டின்கண்ணும் பிரிதல். வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல் காட்டிடையிட்டும் நாட்டிடையிட்டும் பிரிதலெனக் கொள்க. (௩௯)

௪௦. அவற்றுள்,—
ஒருவழித் தணத்தற்குப் பருவங் கூறார்.

இ-ம். ஒருவழித் தணத்தற்குரியதோ ரிலக்கண முணர்-ற்று. வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல் காட்டிடையிட்டும் நாட்டிடையிட்டும் பிரியப்பட்டாராயினதற்குப் பருவவரையறை சொல்லார் சான்றோர். எ-று. (௪௦)

௪௧. வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரித
லிருதுவின் கண்ண தென்மனார் புலவர்.

இ-ம். வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிவினிலக்கணமுணர்-ற்று. வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல் காட்டிடையிட்டும் நாட்டிடையிட்டும் பிரிதல். அஃதிரண்டு திங்க ளிகவாமை யுடைத்தென்று சொல்லுவர் ஆசிரியர். எ-று. என்னை? "களவினுட்டவிர்ச்சி வரைவினீட்டந்-திங்களிரண்டினகமெனமொழிப." எ-வின. (௪௧)

௪௨. களவு வெளிப்படா முன்னும் பின்னும்
விளையு நெறித்தென விளம்பினார் வரைவே.

இ-ம். வரைவுநிகழுமிடமுணர்-ற்று. களவு வெளிப்படாமுன்னும் களவு வெளிப்பட்டபின்னும் விளையுநெறியினையுடைத்தாம் வரைவு என்று சொல்லுவர் புலவர். எ-று. களவு வெளிப்படாமுன்னு மென்றதனால் களவு வெளிப்பட்டபின்னுமெனத் தந்துரைக்கப்பட்டது. இவ்வாறுரைத்தற்கிலக்கணம் யாதோவெனின், "களவுவெளிப்படாமுன்னுறவரைதல்-களவு வெளிப்பட்ட பின்னுறவரைதலென் - றாயிரண் டென்ப வரைதலாறே." எ-வின. (௪௨)

௪௩. நான்குவகைப் புணர்ப்பினுந் தான்றெருண்டு வரைதலும்
பாங்கனிற் பாங்கியிற் றெருளுற்று வரைதலுங்
களவு வெளிப்படா முன்வரைத லாகும்.

இ-ம். களவுவெளிப்படாமுன்னிகழும் வரைவிலக்கணமுணர்-ற்று. மேற்சொல்லப்பட்ட இயற்கைப்புணர்ச்சி முதலாகிய நான்கு புணர்ச்சிக்கணுந் தலைமகன்றானே தெருண்டுவரைதலும் பாங்கனாலாதல் பாங்கியாலாதல் தெருட்டப்பட்டு வரைதலும் ஆகியவிவை களவுவெளிப்படாமுன் வரைதலாம். எ-று. (௪௩)

௪௪. உடன்போய் வரைதலு மீண்டு வரைதலு
முடன்போக் கிடையீ டுற்று வரைதலுங்
களவுவெளிப் பட்டபின் வரைத லாகும்.

இ-ம். களவுவெளிப்பட்டபின்னிகழும் வரைவிற்கிலக்கணமுணர்-ற்று. புணர்ந்துடன்போய தலைமகன், தனதூரின்கண்ணே வரைதலும் மீண்டுவந்து தம்மூரின்கண்ணே வரைதலும், உடன்போக்கிடையீட்டுத் தலைமகன் றலைமகட்டமரை வழிபட்டுவரைதலுமாகியவிவை களவுவெளிப்பட்டபின் வரைதலாம், எ-று. (௪௪)

௪௫. அவற்றுள்,—
உடன் போயவரைத லொருவழித்தாகும்.

இ-ம். உடன்போய்வரைதல் வகையுணர்-ற்று. மேற்சொல்லப்பட்ட மூன்றனுள்ளும் உடன்போய்த் தன்னூரின்கண்ணே வரைதலாகிய வஃதொருவகையினையுடைத்தாம். எ-று. (௪௫)

௪௬. அவணமனை வரைதலுந் தன்மனை வரைதலு
மெனமீண்டு வரைத லிருவகைத் தாகும்.

இ-ம் மீண்டுவரைதலின் வகையுணர்-ற்று. தலைமகளை மனையின்கண்ணே வரைதலும், தனமனையின்கண்ணே வரைதலுமென விரண்டு வகையினையுடைத்தாம உடன்போய்மீண்டு தம்மூரின்கண்ணே வரைதல். எ-று. (௪௬)

௪௭. ஆற்றா றஞ்சினு மவன்வரைவு மறுப்பினும்
வேற்றுவரைவு நேரினுங் காப்புக்கைம் மிகினு
மாற்றுறத் தோன்று மறத்தொடு நிலையே.

இ-ம் அறத்தொடு நிலைநிகழுமிடமுணர்-ற்று. தலைமகன் வரும் வழியேதத்தினையஞ்சியவிடத்துந் தமர்வரைவெதிர்கொள்ளாதவிடத்தும் பிறர்வரைவுநேருமிடத்துங் காவல்கைமிகுந்தவிடத்தும் நெறிப்படப் புலப்படுமறத்தொடுநிலை எ-று. என்னை? "காப்புக்கைம்மிக்க காமம்பெருகினு-நொதுமலர்வரையும் பருவமாயினு-வரைவெதிர்கொள்ளாது தமரவணமறுப்பினு-மவனூறஞ்சுங் காலமாயினு-மந்நாலிடத்துமெய்ந்நாணொரீஇ-யறத்தொடுநிற்றற்றோழிக்குரித்தே." எ-லின். (௪௭)

௪௮. தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும்
பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்குஞ்
செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்கு
நற்றாய் தந்தை தன்னையர்க் கறத்தொடு
நிற்கு மென்ப நெறியுணர்ந் தோரே.

இ-ம். அறத்தொடு நிற்றற்குரியாரையுணர்-ற்று. தலைவி முதலாகிய நால்வரும் இவ்வாறு அறத்தொடு நிற்றற்குரியாரென்று சொல்லுவரகப்பொருளிலக்கணமுணர்ந்தோர். எ-று. (௪௮)

௪௯. ஒருப்புணர் வொழித்தவற் றொருவழித் தணப்பவும்
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரியவு
மிறைவனைச் செவிலி குறிவழிக் காணவு
மனைவயிற் செறிப்பவும் வருந்தங் கூறின்
வினவியக் கண்ணும் வினவாக் கண்ணு
மனநடைக் கிழவி யறத்தொடு நிற்கும்.

இ-ம். தலைமகளறத்தொடு நிற்குமிடமுணர்-ற்று. பாங்கியிற் கூட்டமாகிய ஒன்றுநீங்கின மூன்றுபுணர்ச்சிக்கண்ணுந் தலைமகனொருவழித்தணத்தலானும், வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதலானுஞ் செவிலி தலைவனைக் குறிவயிற்காண்டலானும் இற்செறித்தலானுந் தனக்குவருத்த மிகுமாயிற் றன்னையவள் வினவியவிடத்தும் வினவாவிடத்துந் தலைமகள் பாங்கிக்கறத்தொடுநிற்கும். எ-று. பாங்கி எ-து அதிகாரத்தான் வந்தது. இதற்குவிதி யாதோவெனின், "வரைவிடைவைத்தகாலத்துவருந்தினும்-வரையநாளிடைவந்தோன்முட்டினும்-உரையெனத்தோழிக்குரைத்தற்கண்ணும்-தானேகூறுங் காலமுமுளவே." எ-வின. (௪௯)

௫௦ முன்னிலைப் புறமொழி முன்னிலை மொழிகளிற்
சினமொழிப் பாங்கி செவிலிக் குணர்த்தும்.

இ-ம். பாங்கியறத்தொடு நிற்குந் திறமுணர்-ற்று. முன்னிலைப் புறமொழியும், முன்னிலைமொழியுமாகிய விரண்டினானும் பாங்கி செவிலிக் கறத்தொடுநிற்கும். எ-று. (௫௦)

௫௧. செவிலிநற் றாய்க்குக் கவலையின் றுணர்த்தும்.

இ-ம். செவிலியறத்தொடு நிற்குந் திறமுணர்-ற்று. செவிலியறத்தொடு நிற்குங்காலத்து நற்றாய்க்கு விளங்க அறிவிக்கும். எ-று. (௫௧)

௫௨. நற்றா யறத்தொடு நிற்குங் காலைக்
குரவனுந் தன்னையுங் குறிப்பி னுணர்ப.

இ-ம். நற்றாயறத்தொடுநிற்குந் திறமுணர்-ற்று. நற்றாயறத்தொடு நிற்குங்காலத்துச் சொல்லலாட்பெறாளாதலிற் றலைமகடந்தையுந் தன்னையும் அவள் குறிப்பினானேயுணர்வர். எ-று. என்னை? "தந்தையுந்தன்னையு முன்னத்தினுணர்ப" எ-வின. (௫௨)

௫௩. பாங்கி தலைவியை வினவுஞ் செவிலி
பாங்கியை வினவும் பாங்கி தன்னையு
நற்றாய் தானும் வினவுஞ் செவிலியிற்
பொற்றொடிக் கிழவியை யுற்று நோக்கின்.

இ-ம். அறத்தொடுநிற்பார்க்கு விகற்பமுணர்-ற்று. தலைமகண்மாட்டு வேறுபாடுகண்டுழிப் பாங்கிமுதலாகிய மூவரு மிவ்வாறு விகற்பப்பெறுவார். எ-று. பாங்கிதன்னையுமென்னும்மும்மை நற்றாய் செவிலியை விகற்பலன்றியென்னும் பொருள்படநின்றது. இவ்வாறு நற்றாய் விகற்பவது செவிலியைப்போற் றலைவியையுற்றுப்பார்த்தவிடத்தெனக் கொள்க. ()

௫௪. ஆங்குடன் போயுழி யறத்தொடு நிற்ப
பாங்கியுஞ் செவிலியும் பயந்த தாயும்.

இ-ம். புணர்ந்துடன்போயவிடத்து அறத்தொடுநிற்றற்குரியாரையுணர்-ற்று. தலைமகனுந் தலைமகளும் புணர்ந்துடன்போயகாலத்து அறத்தொடுநிற்பார் தோழியுஞ் செவிலியும் நற்றாயும். எ-று. ஆங்கு அசை. ௫௪

௫௫. களவின் வழிவந்த கற்பும் பொற்பமை
களவின வழிவாராக் கற்புமென வாங்கு
முற்படக் கிளந்த கற்பிரு வகைத்தே.

இ-ம். கற்பின் பாகுபாடுணர்-ற்று. மேற் சொல்லப்பட்ட கற்பு, களவிற் புணர்ச்சிவழியான வந்த கற்பும் களவின்வழிவாராத கற்புமென விரண்டுபகுதியினையுடைத்து. எ-று. அஃதேற் களவின்வழிவந்த கற்பினை முற்கூறியதெனனையெனின், "முற்புணர்தல்சொல்லின்மையிற் கற்பெனப்படுவது களவின்வழித்தே" என்றாராகலின் அதனது சிறப்பு நோக்கியெனக் கொள்க. (௫௫)

௫௬. குரவரிற் புணர்ச்சி வாயிற் கூட்டமென
விருவகைத் தாகுங் கற்பிற் புணர்ச்சி.

இ-ம். கற்பென்னுங் கைகோளிற் புணர்ச்சி வரையறை யுணர்-ற்று. கற்பென்னுங் கைகோளிற் புணர்ச்சி, குரவரால் புணரும் புணர்ச்சியும் வாயில்களாற் புணரும் புணர்ச்சியுமென விரண்டுபகுதியினை யுடைத்து. எ-று. இவற்றுட் குரவரால் புணரும் புணர்ச்சியாவது உலகைகூடிப் புணரும் புணர்ச்சி. வாயிலாற் புணரும் புணர்ச்சியாவது புலவிதீர்த்துப் புணரும் புணர்ச்சியெனக் கொள்க. (௫௬)

௫௭. அவற்றுட்,—
களவின வழிவந்த கற்பின் புணர்ச்சி
கிளைஞரி னெய்தாக் கேண்மையு முடைத்தே
யுடன்போய் வரைதலு முண்மை யான.

இ-ம். களவின்வழிவந்த கற்பிற்புணர்ச்சிக் கெய்துவதோர் வேறுபாடுணர்-ற்று. மேற்சொல்லப்பட்ட விருவகைக் கற்பினுள்ளும் களவின்வழிவந்த கற்பினுட் புணரும் புணர்ச்சி தலைமகள் சுற்றத்தாரால் பெறப்படாத கோட்பாட்டினையுமுடைத்தாம், புணர்ந்துடன்போய தலைமகன் தன்னூரின்கண்ணே வரைந்துகோடலுமுண்டாதலால். எ-று. "கொடுப்போரின்றியுங் கரணமுண்டே-புணர்ந்துடன்போகியகாலையான" எ-லின். (௫௭)

௫அ. மறையிற் புணர்ச்சியு மன்றற் புணர்ச்சியு
மிறைவற் கெய்த லுண் டிருவகைக் கற்பினும்.

இ-ம். தலைமகற்குக் கற்புக்காலத்து நிகழுமொழுக்க வேறுபாடுணர்-ற்று. மேற்சொல்லப்பட்ட இருவகைக் கற்பினகண்ணும் தலைமகற்குக் களவிற்புணர்ச்சியும் வதுவைப்புணர்ச்சியும் பொருந்துதலுண்டு. எ-று. (௫அ)

௫௯. காதற் பரத்தையர் காமக் கிழத்தியர்
பின்முறை வதுவைப பெருங்குலக கிழத்தியென்
றன்னவ ருரிய ரவ்வயிரண் டற்கும்.

இ-ம். அவவொழுக்க மிரணடிறகுமுரிய மகளிரையுணர்-ற்று. காதற்பரத்தை முதலாய மூவகையோருந் தலைவனவவகையொழுகு மொழுக்கமிரணடிறகுமுரியர். எ-று. (௫௯)

௬0. அவருட்,—
காதற் பரத்தையர் களவிற் குரியர்.

இ-ம். களவிற்குரிய மகளிரையுணா-றறு. மேற் சொல்லப்பட்ட மூவகையோருளளுங காதறபரததையா களவொழுககததிறகுரியா. எ-று. (௬0)

௬௧. ஒழிந்தோர் மணறற் புணர்ச்சிக் குரியர்.

இ-ம். வதுவைப்புணாச்சிக்குரிய மகளிரையுணா-ற்று. காமக்கிழததியும், பினமுறைவதுவைப் பெருஙகுலககிழததியுமாகிய விருதிறததோரும வதுவைப்புணாசசிககுரியா. எ-று. (௬௧)

௬௨. பரததையிற பிரித லோதற்குப் படர்த
லருட்டரு காவலொடு தூதிற் ககற
லுதவிக் ககல னிதியிற் ககத்தலென்
றுரையறு கற்பிற பிரிவறு வகைததே.

இ-ம். கறபிறபிரியும் பிரிவுவரையறையுணா-ற்று. பரத்தையிற் பிரிதன் முதலாய நிதியிற்ககததலீறாக வறுவகையினையுடைததாங கறபினகடபிரியும பிரிவு. எ-று. எனனை? "ஓதலகாவலபகைதணிவினையே-வேநதறகுறறுழி பொருடபிரிபரததையென-றாஙகவவாறே யவவயிறபிரிவே" எ-லின. அஃதே லீணடுபெயரத்தையிறபிரிவு முறகூறியதெனனையெனின், அது தொலகாப்பியர் துணிவெனககொள்க. (௬௨)

௬௩. அயனமனைப் பிரிவயற சேரியி னகற்சி
புறசேரிப் போக்கிவை புரவலற் குரிய
பரத்தையிற் பிரியும பருவத் தான.

இ-ம். தலைமகற்குரிய சில தொழிலுணா-றறு. அயன்மனைப்பிரிவு முதலாகிய மூன்று பிரிவுந் தலைமகறகுரியவாம் பரததையிற பிரியுங்காலதது. எ-று.

௬௪. கெழீஇய காமக் கிழத்தியர் பொருட்டாத்
தழீஇய வயன்மனைத் தலைவன் பிரியும்.

இ-ம். சிறந்தமுறையானே யயன்மனைப்பிரிவிற் கேதுவுணர்-ற்று. பொருந்திய காமக்கிழத்தியர் காரணமாகத் தலைமகன்சேர்ந்த அயன்மனைக்கண்ணே பிரியும். எ-று. (௬௪)

௬௫. பின்னர் வரைந்த பெதும்பையும் பரத்தையு
மின்னியல் விழவு மேது வாக
வயன்மனைச் சேரியி னகலு மென்ப.

இ-ம். அயற்சேரியிற் பிரிவுக்கேதுவுணர்-ற்று. இரண்டாவது வரைந்துகொள்ளப்பட்ட பெதும்பைப் பருவக் கிழத்தியுங் காதற்பரத்தையும் விழவுங் காரணமாகத் தலைமக னயற்சேரியின்கண்ணே பிரியும். எ-று. (௬௫)

௬௬. விருந்தியற் பரத்தையைப் பெருந்தேர் மிசைக்கொண்
டிளமரக் காவின் விளையா டற்கும்
புனலா டற்கும் புறநகர்ப் போகும்.

இ-ம். புறநகர்ப்போதற்கேது வுணர்-ற்று. மரக்காவின்கண்ணே விளையாடுதல் காரணமாகவும் புனலாடுதல் காரணமாகவுந் தலைமகன் புதியளாகிய பரத்தையைத் தேர்மேலேற்றிக்கொண்டு நகர்ப்புறத்திலே போம். எ-று. நகர்ப்புறமென மாறுக. (௬௬)

௬௭. ஊட லவ்வழிக் கூடுங் கிழத்திக்கு.

இ-ம். தலைமகட்கூடனிகழுமிடமுணர்-ற்று. அம்மூன்று பிரிவின்கணுந் தலைமகட்கூடல் பொருந்தும். எ-று. (௬௭)

௬௮ கொளைவல் பாணன் பாடினி கூத்த
ரிளையோர் கண்டோ ரிருவகைப் பாங்கர்
பாகன் பாங்கி செவிலி யறிஞர்
காமக் கிழத்தி காதற் புதல்வன்
விருந்தாற் றாமை யெனவிவை யூடன்
மருந்தாய்த் தீர்க்கும் வாயில்க ளாமே.

இ-ம். மேற்சொல்லப்பட்ட வாயில்களாவன விவையென்பதுணர்-ற்று. பாணன்முதலாக ஆற்றாமையீறாகச் சொல்லப்பட்ட விவையனைத்துந் தலைமகளூடலை மருந்தாய்த் தீர்க்கும் வாயில்களாம். எ-று. இதனுளுயர்திணையுமஃறிணையும் விரவியெண்ணி யிவையென வஃறிணையாற் றொகைகொடுத்தது "பலவயினானு மெண்ணுத் திணைவிரவுப் பெயர் - அஃறிணை முடிபின செய்யுளு ளே" எ-வின. (௬௮)

௬௯. ஓதற் றொழிலுரித் துயர்ந்தோர் மூவர்க்கும்.

இ-ம். ஓதற்றொழிற்குரியோர் சிறப்புணர்-ற்று. ஓதலென்னுந் தொழில் அந்தணர் அரசர் வணிகர் எனநிற மூவர்க்குமுரித்து. எ-று. (௬௯)

௭௦ அல்லாக் கல்வி யெல்லார்க்கு முரித்தே.

இ-ம். ஒழிந்த கல்வியினது தன்மையுணர்-ற்று. வேதமல்லாத கல்வி நால்வர்க்குமுரித்து. எ-று. (௭௦)

௭௧. படைக்கலம் பயிறலும் பகடுபிற வூர்தலு
முடைத்தொழி லவர்க்கென வுணர்ந்திசி னோரே.

இ-ம். நாவினாற் கற்குந் தொழிலல்லாத கல்வித்தொழிலுணர்-ற்று. படைக்கலங்களைக் கற்றலும் யானையுங் குதிரையுந் தேரு முதலாயின வூர்தலும் மூவர்க்கு முடைமையாகிய தொழிலெனச் சொன்னார் புலவர். எ-று. பிறவென்றதனாற் றேருங் குதிரையு முதலாயின கொள்ளப்பட்டன. பகடே பிறவுமெனவுமமைத்தொகை. (௭௧)

௭௨. அறப்புறங் காவ னாடு காவலெனச்
சிறப்புறு காவற் றிறமிரு வகைத்தே.

இ-ம். காவற்றொழிலின் பாகுபாடுணர்-ற்று. அறப்புறங்காவலும் நாடு காவலுமென விருகூற்றதாம் மேம்பாடுற்ற காவற்றொழிலின் பாகுபாடு. எ-று.

௭௩. அறப்புறங் காவ லனைவர்க்கு முரித்தே.

இ-ம். நிறுத்தமுறையானே அறப்புறங்காவற்றன்மையுணர்-ற்று. மேற் சொல்லப்பட்ட விரண்டினுள்ளும் அறப்புறங்காவலென்பது நால்வர்க்கு முரித்து. எ-று. (௭௩)

௭௪. மற்றைக் காவல் கொற்றவற் குரித்தே.

இ-ம். நாடுகாவற்றன்மையுணர்-ற்று. நாடுகாவலென்பது அரசற்குரித்து. எ-று. (௭௪)

௭௫. வேத மாந்தர் வேந்தரென் றிருவர்க்குந்
தூது போதற் றொழிலுரித் தாகும்.

இ-ம். தூதுபோதற்றொழிலின்றன்மையுணர்-ற்று. பார்ப்பாரும் வேந்தருமென்னு மிருவர்க்கு முரித்தாந் தூதுபோதற்றொழில் எ-று. பகைதணிவினை யெனினுந் தூதுவினையெனினு மொக்குமென்க.

“வயலைக்கொடியின் வாடியமருங்குல்-உயவலூர்திப்பயலைப்பார்ப்பான்-எல்லி வந்து நில்லாது புகுகுச-சொல்லியசொல்லேயிலவேயதற்கே-யேணியுஞ்சிப்புமா றிய-மாணவிலையானையின்மணிகளைந்தனவே” என்பதனானும், “மடந்தாழ்

நெஞ்சத்தைக் கஞ்சனாவஞ்சங் கடந்தானை நூற்றுவர்பாற் றூறறிசையும்போய்ப் பெற்றத் தூதாகச் சென்றநாளுமுழங்குகப் பஞ்சவர்க்குத் தூது நடந்தானை யேத்தாத நாவென்ன நா வே நாராயணாவென்னா நாவென்ன நாவே” எனபதனுலும் அவ்விருவர்க்குந் தூதுபோதற்றொழி லுரித்தானவாறு கண்டுகொள்க. (எ௫)

எசு சிறப்புப் பெயர்பெற்ற செப்பிய விரண்டு
முற்றக்குரி மரபின வொழிந்தோ ரிருவர்க்கும்

இ-ம் காவல்றொழிற்குந் தூதுபோதற்றொழிற்குமுரியரோர் வேறு பாடுணர்-று அரசராற் சிறப்புப்பெயர் பெற்றாராயின் வணிகருஞ் சூத்திரரு மென்னு மிருவர்க்கு முற்கூறியவிரண்டுதொழிலும் பொருந்துதற்குரிய மரபின வாம். எ-று. உரிமரபெனபது விகாரம். (எசு)

எஎ. உதவி யந்தணர் ரொழிந்தோர்க் குரித்தே.

இ-ம். உதவித்தொழிலினதன்மையுணர்-று வேந்தர்க்குற்றுழியுதவி யாகிய தொழில் அந்தணரொழிந்த மூவர்க்குமுரித்து. எ-று. (எஎ)

எஅ பரத்தையிற் பிரிவும் பொருள்வயிற் பிரிவு
முரைத்த நால்வர்க்கு முரிய வாகும்

இ-ம். நால்வர்க்கும் பொதுவாகிய தொழிலிவையெனபதுணர்-று பரத்தையிற்பிரிவும் பொருள்வயிற்பிரிவுமாகியவிரண்டும் மேற்சொல்லப்பட்ட நால்வர்க்கு முரியவாம் எ-று. (எஅ)

எகூ இழிந்தோர் தமக்கு மிவற்றுண்மேம் பட்டவை
யொழிந்தன வாமென மொழிந்தனர் புலவர்.

இ-ம் நிலமக்களுட டலைமக்களுக்குரிய தொழிலுணர்-று இவ்வகைத் தொழிலுள்ளும் மேம்பட்டனவாகிய வோதலும் காவலுந் தூதுபோதலுமா கிய மூன்றுதொழிலும் ஒழித்தலல்லாதனவெல்லா மிழிந்தோராகிய நிலமக்களுட டலைமக்கட்குரியவாமெனச் சொன்னார் அறிவோர். எ-று. (எகூ)

அ௦. கலவி முதலா வெல்லா வினைக்குஞ்
சொல்லி யகறலுஞ் சொல்லா தகறலு
முரியன கிழவோன பெருமனைக் கிழத்திக்கு.

இ-ம். பிரியுந் தலைமகற் குரியதோ ரிலக்கணமுணர்-று. கலவிமுதலா கிய ஐந்துவினைக்குந் தலைமகட்குச் சொல்லிப்பிரிதலுஞ் சொல்லாது பிரிதலு முரியன் றலைமகன். ([illegible])

அக. சொல்லா தகலினுஞ் சொல்லும் பாங்கிக்கு.

இதுவுமது. தலைமகன் றலைமகட்குச் சொல்லாது பிரியுமாயினுந் தோழி க்குச் சொல்லியே பிரியும். எ-று. (அக)

